Regd No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS). Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G5-TN-MS (C) P.P. 55



**ஒய்வு**

ஒய்வு சிலருக்கு வேலை பலருக்கு என்ற முறைமாறினாலொழிய அது சமூக உயர்வுக்குப் பயன்படும் பண்பு ஆக முடியாது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**அரசு**

மக்களுக்கு கேடு பயக்கும் எப்படிப்பட்ட செயலாக இருப்பினும் அதைக் கண்டிப்பாக அரசாங்கம் தான் கவனித்தாக வேண்டும்

தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 26 - 6 - 1984 செவ்வாய் வெளியூர் 27 - 6 - 1984 புதன் இதழ்: 250

## ஃ உள்நாட்டு பிரச்சினை உண்டாக்குவதை - கலகத்தை தூண்டுவதை ஒடுக்குவோம்

## ஃ கருணாநிதி ஆண்டபோது இருந்த நிலைமை என்ன - அவர் படைத்த சாதனை என்ன?

## திராவிடஸ்தானுக்கு திட்டமிடும் தி. மு. க. வின்

# பிரிவினை உணர்வை தகர்ப்போம்



அமிர்தசரஸ பொற்கோவிலில் நடந்த பிரார்த்தனையில் பிரதமர் இந்திராகாந்தி பங்கேற்றார்.

## அனந்தநாயகி ஆவேச முழக்கம்

சென்னை, ஜூன். 26- பஞ்சாபில் காலிஸ்தான் கேட்கிறார்கள். இங்கு திராவிடஸ்தான் என்கிறார்கள். பிரிவினை எண்ணம் யாருக்கு இருந்தாலும் அதை தகர்ப்போம் என்று காங்கிரஸ் பொதுக் கூட்டத்தில் அனந்தநாயகி குறிப்பிட்டார். மஞ்சள் துண்டு கிடைத்த குருவி மளிகைக்கடை வைக்க ஆசைப்பட்டது போல கருணாநிதி ஆட்சியை பிடித்துவிட ஆசைப்படுகிறார். கருணாநிதி ஆட்சியின் நிலை என்ன? அவரது சாதனை என்ன என்றும் அனந்தநாயகி கேள்விக்கணை தொடுத்தார்.

சென்னை வடபழனி அம்பேத்கார் திடலில் இந்திரா காங்கிரஸ் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு பாசு தலைமை வகித்தார். சூரியபிரகாசம் முன்னிலை வகித்தார்.

இக்கூட்டத்தில் கலந்து கொண்டு முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் டி. என். அனந்தநாயகி பேசினார். அப்போது அவர் கூறியதாவது:

இன்று இந்திய நாட்டை சுற்றி யுத்த அபாயங்கள் தோன்றியுள்ளன. இந்த நேரத்தில் உள்நாட்டுப் பிரச்சினை தோன்றுவது - கலகத்தை உண்டாக்குவது நாட்டின் ஒற்றுமைக்கும் - தேசிய ஒருமைப்பாட்டுக்கும் பாதகமாக முடியும்.

பஞ்சாபில் இன்று நடப்பது என்ன? சீக்கியர்கள் தனி நாடு கேட்கிறார்கள். அவர்கள் காலிஸ்தான் கேட்கிறார்கள். இங்கு சிலர் திராவிடஸ்தான் என்கிறார்கள்.

தமிழ்நாடு பஞ்சாபாக மாறும் என்று சிலர் பேசுகிறார்கள். இந்த நேரத்தில் இப்படி பேசலாமா?

நான்கு தொகுதிகளில் நடந்த இடைத்தேர்தலில் இரண்டு தொகுதிகளில் வெற்றி பெற்றதற்கே கோட்டையை பிடித்தது போல் தி.மு.க. தலைவர் கருணாநிதி குதிக்கிறார்.

அமைச்சர் காளிமுத்து பாணியில் சொல்வது என்றால் மஞ்சள் துண்டு கிடைத்த குருவி மளிகைக்கடை வைக்க ஆசைப்படுவது போல கருணாநிதி ஆசைப்படுகிறார்.

மணிவிழா நாயகர், மக்கள் பிரச்சினைகளைப் பற்றியும் கொஞ்சம் சிந்திக்கட்டும்.

அண்ணாநகர் வெற்றியினால் மட்டுமே நாட்டை ஆளும் ஆசைக்கு வந்துள்ள கருணாநிதி அன்று உங்கள் ஆட்சியின் நிலை என்ன? நீங்கள் படைத்த சாதனை என்ன? மக்கள் சிந்திக்கிறார்கள்.

இந்திய நாட்டில் பிரிவினை எனற எண்ணம் யாருக்கு இருந்தாலும் திராவிடஸ்தான் என்றாலும் அதை தகர்ப்போம்.

இலங்கை பிரச்சினை பற்றி பேசுகிறார்கள். இலங்கை நிலைமை வேறு - பஞ்சாப் நிலைமை வேறு இரண்டையும் போட்டு குழப்ப வேண்டாம்.

வங்கதேச விடுதலைக்கு நாம் உதவினோம். அதனால் எவ்வளவோ பொருளாதார ரீதியில் சுமையையும் தாங்கினோம்.

இன்று அவர்கள் நம் நாட்டு எல்லையில் வேலி போடுவதற்கே எதிர்க்கிறார்கள் எந்தப்பிரச்சினையாக இருந்தாலும் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டும், நாட்டின் ஒற்றுமையைக் காப்பாற்ற வேண்டும்.



இவ்வாறு டி. என். அனந்தநாயகி பேசினார்.

## முதல்வர் தலைமையில் அமைச்சரவை கூட்டம்

சென்னை, ஜூன் 26— முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் அமைச்சரவை கூட்டம் இன்று 2-வது நாளாக கோட்டையில் நடைபெற்றது.

கூட்டத்தில் அமைச்சர்கள் பங்கேற்றனர்.

### ஃ நுழைவுத்தேர்வு முறைக்கு மாணவர்கள் சமூகம் பேராதரவு

# மாணவர்களுக்கு எதிராக போர்தொடுக்கும் கருணாநிதி

## அனைத்துக் கல்லூரி மாணவர் கழகத்தின் ஆய்வு விவரம்

சென்னை. ஜூன். 26- நுழைவுத்தேர்வு முறையை பெரும்பாலான கிராமப்புற மாணவர்கள் வரவேற்று இருப்பதாக அனைத்துக்கல்லூரி மாணவர் கழகம் நடத்திய ஆய்வு கூறுகிறது நுழைவுத்தேர்வை கருணாநிதி எதிர்ப்பது மாணவர்கள் மீது அவர் தொடுககின்ற போராக, மாணவர்கள் மத்தியில் கருத்து நிலவுகிறது.

பொறியியல் மற்றும் மருத்துவக் கல்லூரிகளில் இதுவரை நடத்தப்பட்டு வந்த நேர்முகப் பேட்டி முறையால் முறைகேடுகள் நடப்பதாக கருணாநிதியும், வீரமணியும் குறை கூறினார்கள்.

எனவே நேர்முகப் பேட்டிமுறைக்குப் பதிலாக நுழைவு தேர்வு முறையை முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்துள்ளார்.

முறைகேடுகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கும் இந்த நுழைவுத் தேர்வு முறையால் கழக அரசுக்கு அமோக ஆதரவு கூடிவிடும் தங்களுடைய அரசியல் வியாபாரம் படுத்துவிடும் என்று பயந்து போன கருணாநிதியும், வீரமணியும் இந்த நுழைவுத் தேர்வு முறையையும் குறை கூறுகிறார்கள்.

இந்த நுழைவுத் தேர்வு முறையால் கிராமப்புற மாணவர்களின் வாய்ப்புகள் பறிபோகும் என்று அலறுகின்றனர்.

மூத்த அரசியல் தலைவர்களும், நிபுணர்களும் நுழைவுத்தேர்வு முறையை வரவேற்றுள்ளனர்.

எனினும் கருணாநிதியும், வீரமணியும் தங்களுடைய புலம்பலை நிறுத்தவில்லை.

### மாணவர் கழக ஆய்வு

அவர்களை முழக்கு நுழைவுத் தேர்வு முறையால் கிராமப்புற மாணவர்கள் பாதிக்கப்படுவார்களா என்று அனைத்துக் கல்லூரி மாணவர் கழகம் ஓர் ஆய்வை மேற்கொண்டது.

இந்த அமைப்பைச் சேர்ந்தவர்கள் 6 முக்கிய மையங்களில் தொழில் கல்லூரிகளில் சேருவதற்கான விண்ணப்ப பாரங்களை வாங்கிக் கொண்டு இருந்த மாணவர்களை சந்தித்து நுழைவுத்தேர்வு குறித்து கருத்து கேட்டனர்.

கிராமப்புற மாணவர்களில் 100க்கு 90 பேர் நுழைவுத்தேர்வு முறையை வரவேற்றனர்.

8 சதவீதம் பேர் மட்டுமே எதிர்ப்பு தெரிவித்தனர். மீதமுள்ள 2-சதவீத மாணவர்கள் எவ்வித கருத்தும் சொல்லவில்லை.

நேர்முகப் பேட்டி முறையால் நகர்ப்புற மாணவர்களுக்குத் தான் வாய்ப்பு அதிகம் ஆட்கள் பிடிப்பதால் அவர்களோடு எங்களால் போட்டி போட முடியவில்லை.

மேலும் நேர்முக பேட்டி முறையில் ஆங்கிலத்தில் சரளமாக பதில் அளிக்க தயங்கியதாலும் தாமதப் படுத்தியதாலும் நாங்கள் பெரிதும் பாதிப்புக்கு உள்ளானோம்.

நுழைவுத் தேர்வு முறையில் இத்தகைய நிலை இல்லை தெரிந்த கேள்விக்கு பதில் எழுத குந்த முறையில் நிறைய அவகாசம் இருக்கிறது தாழ்ந்த மனப்பான்மை இல்லாமல் செயல்படவும் முடிந்து சிறந்த முறை நகர்ப்புற மாணவர்களுடன் போட்டி போட்டு எங்கள் திறமையை வெளிப்படுத்த நுழைவுத்தேர்வு முறையே சிறந்தது' என்று கிராமப்புற மாணவர்கள் மகிழ்ச்சியோடு வரவேற்றனர்.

### மாணவி வரவேற்பு

மாணவிகளை பொறுத்த வரையில் எல்லா மாணவிகளும் நுழைவுத் தேர்வு முறையை வரவேற்றனர்.

தொழில் கல்லூரிகளில் சேருவதற்காக கிராமப் பகுதிகளைச் சேர்ந்த 15 ஆயிரத்து 340 மாணவர்கள் விண்ணப்ப பாரங்களை வாங்கினார்கள்.

அவர்களில் 13 ஆயிரத்து 806 மாணவர்கள் நுழைவுத் தேர்வு முறையை வரவேற்றதாக அனைத்து கல்லூரி மாணவர் பேரவையின் மாநில அமைப்பாளர் ஆர். கிருஷ்ணமூர்த்தி தெரிவித்தார்.

### எதிர்ப்பு ஏன்?

நிலைமை இவ்வாறு இருக்க, புரட்சித் தலைவர் மீதுள்ள பொறாமை எண்ணத்தினால் ஏழை எளிய மக்கள் நலனை மறந்து நுழைவுத் தேர்வை கருணாநிதி எதிர்க்கிறார்.

மாணவர் சமூகமே வரவேற்கும் இந்த நல்ல ஏற்பாட்டை கருணாநிதி எதிர்த்து பரணிநடத்தப் போவதாக கூறுவது, மாணவர்களுக்கு எதிராக கருணாநிதி போர்தொடுத்திருக்கிறார் என்ற கருத்து நிலவுகிறது.

## ம.பொ.சி. பிறந்தநாள்: முதல்வர் வாழ்த்து

சென்னை, ஜூன் 26 சிலம்புச்செல்வர் டாக்டர் ம. பொ. சிக்கு இன்று 79-வது பிறந்த நாளாகும். இதையொட்டி முதல்வர் புரட்சித்தலைவர் ம. பொ. சிக்கு வாழ்த்து தந்தி அனுப்பியுள்ளார்.

அமைச்சர்கள் டாக்டர் நாவலர், பண்ருட்டியார் கே.ஏ.கே, ஆர்.எம்.வீ அரங்கநாயகம், எஸ் என் ராஜேந்திரன், கோவேந்தன் கழக பொதுச் செயலாளர் ப.உ.ச. பொருளாளர் மாதவன், மோகனரங்கம் எம் பி. அனகாபுத்தூர் ராமலிங்கம், எம் எல். சி. புலவர் புலமைப்பித்தன், நீலாவதி எம்.எல்.சி. முன்னாள் முதல்வர் பக்தவத்சலம், எம். பி சுப்பிரமணியம் வை.பாலசுந்தரம், செங்கம் ஜப்பார் ஜெமினிகணேசன் ஆகியோர் ம. பொ. சிக்கு மாலை அணிவித்து வாழ்த்துதெரிவித்தார்கள்.

இலங்கை அமைச்சர், ராஜதுரை, சபாநாயகர் ராஜாராம் ஆகியோர் தொலை பேசி மூலம் பிறந்தநாள் வாழ்த்து தெரிவித்தனர் இன்று சென்னை மியூசிக் அகாடமி அரங்கில் முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் டாக்டர் ம. பொ. சிக்கு பாராட்டு விழா நடைபெறுகிறது.

## புலித்தேவன் பதில்கள்

கேள்வி: தி மு க தலைவர் கருணாநிதி சாராயக் கலவை ஆலைகளை நாட்டுடைமை ஆக்கவேண்டும் என்று கோரியிருக்கிறாரே?

பதில்: இவர் முதலமைச்சராக இருந்தபோது இந்த முயற்சி செய்யாதது ஏன?

### கற்றறிந்தோரும் - கட்சித் தலைவர்களும் பாராட்டுகிறார்கள்

# நுழைவு தேர்வு: உழைப்பாளர் முன்னேற்றக் கட்சி வரவேற்பு

## மார்க்கப்பந்து விடுத்துள்ள அறிக்கை

சென்னை. ஜூன் 26. தமிழக அரசு தொழிற்பயில் கல்லூரிகளுக்கும் மருத்துவக் கல்லூரிகளுக்கும் நுழைவுத் தேர்வு வைத்திருப்பதை உழைப்பாளர் முன்னேற்றக் கட்சி வரவேற்றுள்ளது.

அக்கட்சியின் தலைவர் மார்க்கபந்து ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

பொறியியல் மருத்துவக் கல்லூரிகளில் மாணவர்கள் சேர்ந்தெடுக்க தமிழக அரசு அறிவித்துள்ள நுழைவுத் தேர்வு முறையை உழைப்பாளர் முன்னேற்றக் கட்சி வரவேற்கின்றது.

காரணம், இதுவரையில் கடைபிடிக்கப்பட்ட நேர்முகத் தேர்வின் மூலம் வசதியானவர்களுக்கு வாய்ப்பும், வசதியற்றவர்களுக்கு வாய்ப்பில்லையென்று இதுவரையில் அரசியல் ரீதியாக குற்றச்சாட்டுகளை மக்கள் முன் வைத்தனர். மக்கள் மனதில் அந்த குற்றச்சாட்டுகள் ஐயத்தை ஏற்படுத்துவதற்கு வழிவகுத்தன.

அத்தகைய குற்றச்சாட்டுகளை நுழைவுத் தேர்வு முறையின் மூலமாக முறியடிக்க முடியும்.

மாணவர்கள் தங்களுடைய படிப்பறிவின் மூலமாக இரு முறைகளிலும் மதிப்பெண்கள் பெறுவதற்கு வாய்ப்பு ஏற்படுகின்றது. உதாரணமாக பள்ளியில் குறைந்த மதிப்பெண்கள் பெற்ற மாணவர்களும், நுழைவுத் தேர்வின்முறையில் கூடுதலான மதிப்பெண்கள் பெற்று தங்கள் தகுதியை உயர்த்திக் கொள்வதற்கு வாய்ப்பு உண்டு.

### இதுவே சிறந்தது

நேர்முகத் தேர்வின் மூலமாக அதிக மதிப்பெண்கள் பெற்ற மாணவர்களும் புதிய சூழ்நிலையில் தேர்வுக் குழுவை சந்திக்கின்ற மாணவர்கள் பயத்தின் காரணமாக சரியான முறையில் பதிலளிக்கத் தவறினால் தங்களுடைய வாய்ப்பை இழந்து விடுவதற்கும் வாய்ப்புகள் இருந்தன. இந்த சூழ்நிலை நுழைவுத் தேர்வின் மூலம் மாற்றப்படும்.

பின் தங்கிய சமுதாய மக்களுக்கு 50 சதவீதம், தாழ்த்தப்பட்டவர்களுக்கு 18சதவீதம் என்கிறமுறையில் நுழைவுத் தேர்வில் பெறுகின்ற மதிப்பெண்களுக்கும் மேற்கண்ட முறைகள அனுசரிக்கப் படவேண்டும். அத்துடன் மிக மிக பின் தங்கிய சமுதாய மக்களுக்கு ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை தனி ஒதுக்கீடு செய்வதன் மூலம் இம்முறையை பின்பற்றுவது சிறப்பாக அமையும்.

### முன்புதான் வாய்ப்பில்லை

நகர்ப்புற மாணவர்களுக்கு அதிக வாய்ப்பு என்ற குற்றச்சாட்டு நீண்டகாலமாக இருந்து வருகின்றது. அக்குற்றச்சாட்டு பள்ளியில் பெறும் மதிப்பெண்களுக்கும் பொருந்தும். காரணம் நல்ல வசதியான நகர்புற சூழ்நிலையில் படித்த குடும்பங்களில் இருந்து வரும் மாணவர்கள அதிக மதிப்பெண்கள் பெற வாய்ப்பு உள்ளது. ஆனால் கிராமப் பகுதிகளில் கல்வி இல்லாத குடும்பங்களில் இருந்தும் வசதியற்ற குடும்பங்களில் இருந்தும் வருகின்ற மாணவர்கள் மிகக் குறைவான மதிப்பெண்களையே பெற்று பள்ளியிலிருந்து வெளியேறுகின்றனர்.

ஆகையால் அந்த மாணவர்களுக்கு முன்பு இருந்த முறையிலும் வாய்ப்புகள் இல்லை என்றே சொல்லலாம்

இவ்வாறு மார்க்கபந்து கூறியுள்ளார்.

---

### தொழிலாளர் கிளர்ச்சியில் தி. மு. க. கருங்காலித்தனம்:

# கழகத் தோழரை உளியால் குத்திக் கொன்ற தி.மு.க.வுக்கு ஆயுள் தண்டனை ஊர்ஜிதம்

## உயர்நீதிமன்றம் தீர்ப்பு

சென்னை, ஜூன் 26. தொழிலாளர் போராட்டத்தில் கருங்காலித்தனம் செய்தனர். தி.மு.க.வினர் கிளர்ச்சி நடத்திய கழகத்தோழரை உளியால் குத்திகொன்ற தி மு க. நபருக்கு விதிக்கப்பட்ட ஆயுள்தண்டனை உயர்நீதி மன்றத்தில் ஊர்ஜிதம் செய்யப்பட்டது.

கோவை ஆர் எஸ் புரத்தில் உள்ள ஒரு தொழிற்சாலையில் 1980ல் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர் கழகத் தோழர்களும் அதில் கலந்து கொண்டனர்.

தி. மு. க. தொழிற் சங்கத்தினர் அதை எதிர்த்து கருங்காலி வேலை செய்தனர்.

அங்குள்ள கழக தொழிற் சங்கத்தில் 52 பேரும் தி. மு. க. தொழிற் சங்கத்தில் 34 பேரும் இருந்தார்கள்.

வேலைநிறுத்தம் செய்த கழகத் தோழர்களை தி. மு. க. வினர் தாக்கினார்கள். அப்போது கழக தோழர் பழனிசாமி ஒரு பள்ளத்தில் விழுந்து விட்டார்.

தி.மு.க.வைச் சேர்ந்த நடராஜன் ஒரு திருப்புளியால் (ஸ்குரு டிரைவர்) பழனிசாமியின் நெஞ்சில் குத்தினார். படுகாயமுற்ற பழனிசாமி மரணம் அடைந்தார்.

இதுசம்பந்தமாக நடராஜன் மற்றும் 6 பேர் மீது வழக்கு தொடரப்பட்டது கோவை செசன்சு கோர்ட்டில் தி. மு. க நபர் நடராஜனுக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. மற்ற 6 பேர் விடுவிக்கப்பட்டனர்.

தண்டனையையெதிர்த்து திமுக ஆசாமி நடராஜ அப்பீல் செய்தார்.

உயர்நீதி மன்ற நீதிபதிகள மகஸ்வரன, செங்கோட்டுவேலன் ஆகியோர் அப்பீல் மனுவை விசாரித்து ஆயுள் தண்டனையை உறுதிப்படுத்து தீர்ப்பளித்தனர்.

### அமைச்சர் காளிமுத்து பேசுகிறார்

சென்னை, ஜூன், 26— சென்னை பரங்கிமலை பட்ரோடு மேகஜின் செண்ட் கம்பெனி அருகில் இன்று மாலை 6 30 மணிக்கு அமைச்சர் காளிமுத்து பேசுகிறார். இக்கூட்டத்திற்கு விமல்குமார் தலைமை வகிக்கிறார்.

அமைச்சர் காளிமுத்து, மாசிலாமணி எம். எல். சி அப்துல் ரசாக் எம். எல். ஏ. ஆஜால் ஜலீல், சேதுராசன, மு. பச்சையப்பன் எஸ். எம். துரையரசன், சக்கரபாணி லெனின், அல்போன்ஸ் சிவலிங்கம், ராமசாமி, முனுசாமி, வின்செண்ட், பரமசி பாண்டியன், மற்றும் பலர் பேசுகிறார்கள்.

சாஞ்சி அண்ணா தாசனின் பேட்டப் இசை நிகழ்ச்சி நடக்கிறது.

இப் பகுதி தொடர்ச்சிகள், இப்படி முத்தமிழுக்கு அன்னைத் தமிழுக்கு முதலிடம் கொடுப்பவர் தான் முதல்வர் புரட்சித் தலைவர்.

இப்படிப் பட்டநாடகங்கள் கிராமப் புறங்களிலே நடித்துக் காட்ட ஏற்பாடு செய்ய வேண்டுமென இந்த இருதுறைகளையும் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் பேசினார்.

மேலும் இக்கூட்டத்திற்கு மக்கள் நலவாழ்த்துறை அமைச்சர் அண்டே தலைமை வகிக்க, இயக்குனர் செய்தி மக்கள் தொடர்பு மற்றும் அலுவலர் அரசு துணைச் செயலாளர் ஏ. எல். இருஷ்ணபாரதி வரவேற்புரை வழங்க, மக்கள் நல்வாழ்வுத்துறை இயக்குனர் ராதாகிருஷ்ணன் நன்றி கூறினார்.

# புரட்சிதலைவர் முன்பு கழகத்தில் இணைந்த தி. மு. க. பிரமுகர்

சென்னை, ஜூன், 26. தர்மபுரி நகர தி. மு. க வில் பல்வேறு பொறுப்புகளில் இருந்தவரும் மாவட்ட தி மு க. முக்கிய பிரமுகரும். பேரறிஞர் அண்ணாவிடம் நெருங்கிப் பழகியவருமான தர்மபுரி டி. ராஜாமணி முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தார்.

அப்போது மாவட்ட எம் ஜி ஆர். மன்றத் தலைவரும் சட்டமன் உறுப்பினருமான டாக்டர் சமரசம், தர்மபுரி மாவட்ட ஸ்டார்ச் உற்பத்தியாளர்கள் கூட்டுறவு சங்க துணைத் தலைவர் டி எஸ் சண்முகம், மற்றும் கழக பொதுக்குழு உறுப்பினர் வழக்கறிஞர் அவானந்தம் முன்னாள் எம்பி முருகேசன் ஆர் ராமச்சந்திரன் ஆகியோர் உடன் இருந்தனர்.

### கோவில் சக்காராக

# சந்திரசேகரராஜா நியமனம்

சென்னை, ஜூன் 26 கோடம்பாக்கம் பாரசவாஜேஸ்வரர்கோவிலுக்கு தக்காராக என். சந்திரசேகரராஜா நியமிக்கப் பட்டுள்ளார்.

# வடாற்காடு மாவட்டம்: அண்ணா பவளவிழா கட்டிடங்கள் திறப்பு

வேலூர், ஜூன் 26 — வட ஆற்காடு மாவட்டத்தில் அண்ணா பவளவிழா நினைவு பள்ளிக்கட்டிடங்கள் இரண்டை விவசாய அமைச்சர் காளிமுத்து திறந்து வைத்தார்.

வருகிற செப்டம்பர் 15-ம் தேதி பேரறிஞர் அண்ணா பவள விழா கொண்டாட கழகம் ஏற்பாடு செய்து வருகிறது

இதையொட்டி 1 லட்ச ரூபாய் செலவுக் ள் கட்டி முடிக்கப்படும் அரசு கட்டிடங்களுக்கு அண்ணா பவள விழா நினைவுக்கட்டிடம் என்று பெயரிடப்படும் என்றும் முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்தார்.

வட ஆற்காடு மாவட்டத்தில் அணைக்கட்டுப் பகுதி வண்கம்பாடியம் ஒன்றியத்தைச் சேர்ந்த காகாயம் கிராமத்திலும், பத்தார்குடடை என்ற கிராமத்திலும் அண்ணா பவளவிழா நினைவுகட்டிடம் என்ற பெயரில் 2 பள்ளிகூடங்கள் கட்டப் பட்டுள்ளன. அவற்றை அமைச்சர் காளிமுத்து திறந்துவைத்துபேசினார்.

வெட்டுவானம் என்ற கிராமத்தில் கழகக்கொடி ஏற்றிவைத்து அமைச்சர் காளிமுத்து உரை நிகழ்த்தினார்.

சண்முகம் தலைமையில் பள்ளிகொண்டா நகரில் நடந்த கழக பொதுக் கூட்டத்திலும், மணி தலைமையில் காட்பாடி காந்திநகரில் நடந்தகழக பொதுக் கூட்டத்திலும் அமைச்சர் காளிமுத்து கலந்துகொண்டு சிறப்புரையாற்றினார்.

ஜி. விசுவநாதன் எம்எல்ஏ நிகழ்ச்சியில் பங்கேற்றார்.

தி மு க. அரசியல் நடவடிக்கைகளையும் முதல்வர் புரட்சித்தலைவரிடம் கருணாநிதி கொண்டுள்ள எதிர்ப்பு உணர்ச்சியையும் அமைச்சர் காளிமுத்து பேச்சையில்கண்டித்தார்

இவ்விரு இடங்களிலும் அமைச்சரின் பேச்சை கேட்க சுற்றுப்புறக் கிராமங்களிலிருந்து ஏராளமான மக்கள் திரண்டு வந்தனர்.

---

# மதுரையில் 25 ஆயிரம் நெசவாளர்கள் மீண்டும் வேலைக்கு திரும்பினர்

மதுரை. ஜூன். 26- மதுரையில்சில கோரிக்கைகளைவலியுறுத்திநெசவுத் தொழிலாளர்கள்வேலைக்கு செல்லாமல் இருந்தனர். இது தொடர்பாக சென்னையில் நடைபெற்ற சமரச பேச்சு வார்த்தை முடிவைத் தொடர்ந்து சுமார் 25 ஆயிரம் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பினர். கதவடைப்பு நாளில் 2 நாளுக்குரிய தொகையைதொழிலாளர்கள்உதவித்தொகையாகப் பெற்றனர்

# ஸ்ரீபெரும்புதூர் ஒன்றிய செயல் வீரர் கூட்டம்

சென்னை, ஜூன் 26 ஸ்ரீபெரும்புதூர் ஒன்றிய கழக செயல்வீரர் ஆலோசனைக் கூட்டம் டி. பி. கோவிந்தசாமி தலைமையில் நடைபெற்றது.

ஒன்றிய கழக பொறுப்பாளர் பிள்ளைப்பாக்கம் மூர்த்தி, முனுசாமி, குமாரவடிவேலு, சுப்பிரமணியம் மற்றும் பலர்கலந்துகொண்டனர். கூட்டத்தில் அண்ணா பவளவிழா சிறப்பாக கொண்டாடுவது. கழக வளர்ச்சி பணிகள் குறித்து ஆலோசிக்கப்பட்டது.

# திருச்சி மாவட்டகழக ஆலோசனை கூட்டம்

திருச்சி, ஜூன். 26— கழக ஆக்கப்பணிகள் குறித்துவிவாதிக்க திருச்சி மாவட்டக் கழக ஆலோசனைக் கூட்டம் வரும் 29ந் தேதி வெள்ளிமாலை 3 மணிக்கு மாவட்ட அவைத்தலைவர் கே.வடிவேல் தலைமையில திருச்சி டவுன் ஹால் மண்டபத்தில் நடைபெறுகிறது.

சத்துணவு அமைச்சர் ஆர். சவுந்திரராசன் முன்னிலையில் நடைபெறும் இந்தக் கூட்டத்தில் கழக நிர்வாகிகள் தவறாது கலந்துகொள்ளுமாறு மாவட்டச் செயலாளர் கே. சவுந்திரராசனும், மாவட்ட இணைச் செயலாளர் நல்லுசாமியும் கேட்டுக் கொண்டுள்ளனர்.

---

### கலைவிழாக்கள் மூலம்

# குடும்ப நலத் திட்ட சிறப்புகள் பற்றி பிரச்சாரம்

## அமைச்சர் சவுந்திரராசன் பாராட்டு

சென்னை, ஜூன், 26 கலைவிழாக்கள் மூலம் குடும்ப நலத்திட்டப் பிரச்சாரம் செய்வதற்கு அமைச்சர் சவுந்திரராசன் பாராட்டு தெரிவித்தார்.

மக்கள் நல்வாழ்வுத்துறையும்செய்திமக்கள்தொடர்புத்துறையும் இணைந்து சென்னை மெரீனா கடற்கரையில் 'கடற்கரை கலைவிழா' ஒன்றை ஏற்பாடு செய்தன. இவ்விழாவில் சத்துணவு அமைச்சர் ஆர் சவுந்தராஜன் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினார். அப்போது அவர் பேசியதாவது:

இயற்கை எழில் கொஞ்சும் இந்த மெரீனா கடற்கரையைக் கண்டு களிக்கவும் அதனை ரசிக்கவும் பல இடங்களிலிருந்து மக்கள் திரளாகக் கூடுகின்றனர். இவ்வாறு பலர் ஒன்று கூடும் இடத்திலே ஒரு கலை விழாவை ஏற்படுத்தி அதன் மூலம் நல்ல கருத்துக்களைச் சொல்லவேண்டும் என்று எண்ணிய இவ்விழா ஏற்பாடு செய்யப்பட்டது

உலகத்திலேயே இப்படி ஒரு நல்லயோசனையோடு செயல்படுவது தமிழ்நாடு அரசு தான். பல கலை நிகழ்ச்சிகளைப் பணக்காரர்கள் மட்டுமே பார்க்க முடியும். ஏழைகள் பார்க்க முடியாது. ஆனால் இப்படிப்பட்ட இடங்களிலே நடத்தினால்தான் ஏழைஎளியோரும்எளிதில் பார்க்கலாம். இதன் மூலம் சொல்லப்படுகின்ற நல்ல கருத்துக்கள் அவர்களுக்கும் சேரும். இந்தக் கலைவிழா வெறும் பொழுது போக்குக்கும் சிரிப்புக்கும் மட்டுமல்ல கலைவாணர் சொன்னதைப்போல் சிரித்து விட்டு சிந்திப்பதற்குத்தான்.

குடும்ப நலம் என்றாலே குழந்தைபெற வேண்டாம் என்று சொல்வது தானென்று சிலர் எண்ணுகிறார்கள். அப்படி நினைப்பது அறியாமையே ஆகும். இதனை விட்டிலே இருக்கிறவர்கள் புரிந்துகொள்ளவேண்டும்.

இந்தக் கருத்து எதற்காகச் சொல்லப்படுகிறது என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். இரண்டுக்கு மேல் எப்போதும் வேண்டாம் என்று சட்டம் போடுவதால் மட்டும் மக்களைத் திருத்திவி முடியாது சட்டத்தால் மட்டுமே மக்களின் மனதைமாற்றி விட முடியாது. மக்களை சிந்தித்து மக்களிடையே மனமாற்றத்தை ஏற்படுத்த வேண்டும். அப்படி ஒவ்வொருவரும் செயல்பட்டு மனம் மாறினால்தான உண்மையிலேயே நாம் நன்றாக வாழ முடியும்.

இப்படி நடக்கப்படுகின்ற கலைவிழாக்கள நகர்ப்புறங்களில மட்டுமல்ல, முக்கியமாக கிராமப்புறங்களிலே நடத்திக் காட்ட வேண்டும். அப்பொழுது தான் அவர்கள் இதயத்தில் பதியும் வெறும் எழுத்தாலோ பேச்சாலோ மக்களை எளிதில் மாற்றி விட முடியாது. அவற்றை நடித்துக் காண்பிப்பதின் மூலம் வெகு சீக்கிரமே அவர்களைத மாற்றி விடலாம்.

இதைத் தான் இயல், இசை, நாடகம் என்று கூறியிருக்கிறார்

(1 ம பக்கம் பார்க்க)

பாண்டிச்சேரியில், எம்.ஏ. சண்முகம் படத்தினை அமைச்சர் டாக்டர் நாவலர் திறந்துவைத்தார். நிகழ்ச்சியில் புதுவை சபாநாயகர் எம் ஓ எச் பருக் புதுவை மாநில செயலாளர் பி. கே. லோகநாதன, எம் ஏ. சண்முகத்தின் மகன் எம் ஏ. எஸ். சுப்பிரமணியம், மாநிலக்கழக பொருளாளர் என். உமாபதி ஆகியோர் நிகழ்ச்சியில் பங்கேற்றனர்.

காட்பாடி ஊராட்சி ஒன்றியம் சோககாடு கிராமத்தில் தி. மு க வைச் சேர்ந்த 150 போகள் ஜே. கணேசன் எஸ் ஈஸ்வரன், எஸ் தேவராஜ் ஜே கிருஷ்ணன், வி பெருமாள் ஆகியோர் தலைமையில் அக்கட்சியை விட்டு விலகி வட ஆற்காடு மாவட்ட செயலாளரும் தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தலைவருமான ஏ. எம். ரகுநாதன் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர் அபபோது காட்பாடி ஒன்றிய செயலாளர் ஏ பி ஜயவேலு எம் ஜி ஆர் மன்ற தலைவர் எஸ கே மூர்த்தி செயலாளர் கே தர்மலிங்கம் கீழ்மோட்டூர் கிளைக் கழக செயலாளர் எம். தனபால், மேலவைப் பிரதிநிதி பி ஜானகிராமன் ஆகியோர் உடனிருந்தனர்.

நுழைவுத்தேர்வு - மக்களை திசை திருப்பிவிடலாம் எனக்கருதி

# கற்பனைக் கோட்டையில் மிதக்கும் கருணாநிதி

## கழகப் பொருளாளர் மாதவன் கடும்தாக்கு

### முதல்வர் புரட்சித்தலைவர் அரசுதான் பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்டவர்களுக்கான இடஒதுக்கீட்டை அதிகரித்தது

சென்னை, ஜூன். 26. கருணாநிதி ஆட்சியில் தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு 49 சதவிகிதமாக இருந்த இட ஒதுக்கீட்டை புரட்சித்தலைவர் அரசு தான் 68 சதவிகிதமாக ஆக்கியுள்ளது. இந்நிலையில் கருணாநிதி நுழைவுத் தேர்வினைக் காட்டி மக்களை திசை திருப்பலாம் என கற்பனைக் கோட்டையில் மிதக்கிறார் என்று கழக பொருளாளர் செ. மாதவன் கூறினார்.

சென்னை துறைமுகப் பகுதி பொன்மனச்செம்மல் எம். ஜி. ஆர். இளைஞர் மன்றத்தின் சார்பில் அண்ணா பவளவிழாவினை ஒட்டி கழகக் கொடியேற்று விழா நேற்று நடைபெற்றது.

கூட்டத்திற்கு தேரடி பிரகாஷ்சன் தலைமை வகித்தார். கே எல்லப்பன், என். சுப்பு, எம். ராதாகிருஷ்ணன், பழக்கடை ஆர் மோகன் முன்னிலை வகித்தனர்.

கூட்டத்தில் கலந்து கொண்டு கழகப் பொருளாளர் செ. மாதவன் பேசினார். அப்போது அவர் கூறியதாவது:-

இந்தப் பகுதியில் கழகக் கொடியேற்று விழா என்று என்னை அழைத்தார்கள், ஆனால் பொதுக்கூட்ட மேடை போட்டு சிறப்பான முறையில் இங்கு அரசியல் செயல் திட்டங்கள் பற்றி விரிவாகப் பேசினார்கள்.

நிறைவு விழாவை பவள விழாவாக நமது கழகம் கொண்டாடுகிறது.

இந்தப்பகுதியில் நிறைய கொடியேற்று விழாக்கள் நடத்தவேண்டும் என்று சொன்னார்கள்.

ஒரு காலத்தில் திமுக அமைச்சரவையில் அமைச்சராக இருந்து அனுபவப்பட்டவன் நான். கட்சியின் அஸ்திவாரம் அடிமட்டத் தொண்டர்கள் தான். சாதாரண மக்களை அனுகி சாமான்ய மக்களுக்காகத்தான் கழக அரசு பாடுபடுகிறது. அந்த மக்கள் நலனுக்காகத்தான் புரட்சித் தலைவர் அரசு செயல்படுகிறது.

ஒவ்வொரு பகுதியிலும் கழகக் கொடியினை ஏற்ற வேண்டும். அங்கெல்லாம் அண்ணாவின் புகழ்ப் பரணி பாடவேண்டும். அந்தப் பணியில் இந்த நண்பர்கள் செயலாற்றி வருகிறார்கள் என்பதை அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன்.

அண்ணாநகரில் இடைத் தேர்தல் நடந்தது அதில் திமுக வெற்றியும் பெற்றது. இந்தவெற்றியினால ஆளுகின்ற கழக அரசைத் தாக்கிப்பேச — குறைகூறிப் பேச திமுகவினருக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

பாடுகிறார்கள் - அவர்களுடைய சீக்கிய மதத்தைச் சேர்ந்தவர்களில் மாற்றுக் கருத்து கொண்டவர்கள் கூட கொல்லப் படுகிறார்கள்.

புனிதமான கோயில் கொலைக்களமாக மாறிவிட்ட இயந்திர துப்பாக்கிகள் அந்தப் புனிதக் கோயிலில் வைக்கப்பட்டிருக்கின்றன. ராணுவத்தையே கடும் அளவுக்கு இயந்திர துப்பாக்கிகளை வைத்திருந்தார்கள்.

## இவர்களுக்கு ஏன் அக்கறை?

பொற்கோயிலை ஆயுத தளமாக்கியதை எல்லா கட்சிகளும் கண்டிக்கிறார்கள். அகில இந்திய கட்சி எல்லாம் கண்டிக்கின்றன.

ஆனால் தி.மு.க நிலை என்ன? ராணுவம் வாபஸ் பெற வேண்டும் என்பதில் இவர்களுக்கு ஏன் அக்கறை?

இன்று திமுகவுடன் கூட்டணி அமைத்துள்ள இடது - வலது கட்சிகள் எல்லாம் திமுக மீது ஊழல்நாயகன் என்று மனு கொடுத்தவர்கள்தான் இன்று அவர்கள் தி. மு. க தலைவரை தூக்கிவிட நினைக்கிறார்கள்.

மக்களின் அடிப்படை பிரச்சினைகளில் கூட ஆளும்கட்சியுடன் எதிர்க்கட்சி ஒத்துழைக்காமல் இருப்பது தான் எதிர்க்கட்சியின் இலக்கணமா?

வரும் பொதுத் தேர்தலை சந்திக்கப் போகிறார் கருணாநிதி. இப்போதே அவருக்கு சென்னை கோட்டை தெரிகிறது. அவர் உட்கார்ந்த முதல் அமைச்சர் நாற்காலி தெரிகிறது.

மாணவர்களை கல்லூரிக்கு அனுப்புவதில் எந்த முறை பின்பற்றப்பட வேண்டும் என்பது இப்போதுள்ள கேள்வி.

மாணவர்களுக்கு தேர்வு நடத்துவோம். அதில் மாணவன் அதிகம் மதிப்பெண் பெற்றால் அந்தக் கெட்டிக்கார மாணவனுக்கு இடம் கொடுக்கவேண்டும் என்பது ஆளும் கட்சியின் திட்டம்.

திமுக தலைவர் சொல்கிறார் - பின்தங்கிய மக்கள், ஏழை மக்கள் தாழ்த்தப்பட்ட மக்களை கொடுமைபடுத்தும் திட்டம் என்கிறார் கருணாநிதி.

பின்தங்கிய மக்களுக்காக, தாழ்த்தப்பட்ட மக்களுக்காக தி.மு.க. ஆட்சிகாலத்தில் 49 சதவிகிதம் தான் இடம் ஒதுக்கப்பட்டது. ஆனால் புரட்சித்தலைவர் ஆட்சியில் 68 சதவிகிதம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது.

68 சதவிகிதம் பின்தங்கிய மக்களுக்குத்தான் போகப்போகிறது. மீதி 32 சதவிகிதம் தான் யார் கெட்டிக்காரனோ அவனுக்கு இடம் என்கிறோம். இதற்கு எதிர்ப்புத் தெரிவித்து குறை சொல்லி ஆட்சியை கவிழ்க்க நினைக்கிறார் கருணாநிதி.

யாரும் சொல்லாத ஒன்றை இல்லாத ஒன்றை சொல்லிச் சொல்லி கற்பனைக் கோட்டையில் மிதக்கிறார் தி. மு. க தலைவர் கருணாநிதி.

நுழைவுத்தேர்வு மூலம் மக்களை திசை திருப்பி விடலாம் எனக் கருதுகிறார் கருணாநிதி.

ஆட்சி ஒன்றையே குறிக்கோளாக வைத்து, பதவி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு, இயக்கத்தை நடத்துகிறார் திமுக தலைவர் கருணாநிதி.

எதிர்க்கட்சியும் பலமாக இருக்க வேண்டும். ஆளும் கட்சியும் பலமாக இருக்க வேண்டும் என்பதுதான் கழகத்தின் கொள்கை.

தன்னிடம் இருந்த தொகுதியை எந்த இடத்திலும் இழக்கவில்லை கழகம் எல்லா இடத்திலும் வெற்றி பெற்றிருக்கிறது.

ஒரு மாநிலத்தின் முதல் அமைச்சராக இருந்தாலும் தன் கட்சியின் குறையை சொல்லி - கண்டிக்கிற பக்குவம் - தைரியம் புரட்சித் தலைவருக்குத் தான் இருந்தது.

இவ்வாறு கழகப் பொருளாளர் செ. மாதவன் பேசினார்.

கூட்ட முடிவில் கழகப் பொருளாளர் செ. மாதவன் கழகக் கொடியினை ஏற்றி வைத்தார்.

மற்றும் இக்கூட்டத்தில் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, வேலாயுதம், எஸ். பி. டிவிஜயன், எம். பி. ஆனந்தன், வெங்கடேசன் சிவா, ஆகியோர் பேசினர்.

## அண்ணா பவளவிழா

அண்ணா அவர்கள் இந்தியத் துணைக் கண்டத்திலேயே தனித்து ஒரு கட்சி ஆரம்பித்து அதில் வெற்றியும் கண்டார். அண்ணா அவர்கள் மறைந்து நாம் இன்றைக்கு அவர் நினைவாக இருந்தாலும் அவரது 75 ஆண்டு

## கனவு காணும் கருணாநிதி

தாங்கள் (திமுக) தோற்றுக் கொண்டே இருந்த சரித்திரம் மாறி வெற்றியடைய ஆரம்பித்து விட்டதாக கனவுகாண்கிறார் கருணாநிதி.

இத்தனை ஆண்டுகளாக அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் தொடர்ந்து வெற்றி பெற்று வந்திருக்கிறது. ஆகவே அண்ணாநகர் தோல்வி தி. மு. க. வினருக்கு ஒரு பெரிய வெற்றியாகத் தெரிகிறது. அதனால் தஞ்சைக் கோட்டை பறிபோனதும் அவர்களுக்கு புரியவில்லை. உப்பிலியாபுரத்தில் கழகத்தின் மாபெரும் வெற்றியும் மொத்த வாக்காளர் எண்ணிக்கையில் பார்த்தால் கழகத்தின் மீது தான் மக்கள் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பது புரியும்.

எந்தப் பிரச்சினையானாலும் எங்கும் எதிலும் குறை கூறி ஆளும் கட்சியை அகற்றிவிட வேண்டும் என்று நினைக்கிறார் கருணாநிதி.

## கருணாநிதியின் ஆத்திரம்

நேருவின் மகளே வருக நிலையான ஆட்சி தருக என்று கூறி வந்த கருணாநிதி இன்று தனது பத்திரிகையில் பிரதமர் இந்திரா காந்தியை எப்படி சித்தரிக்கிறார் என்பதை பாருங்கள். ஏன் இந்த ஆத்திரம்? இந்திரா காந்தி அப்படி என்ன தான் தவறு செய்தார். அவர் செய்த தவறு தன்னுடைய ஆதரவு தி.மு.க.வுக்கு இல்லை என்றதுதான்.

பஞ்சாப் மாநிலத்தில் மத உணர்ச்சியினால் அப்பாவி மக்கள் கொலைப்

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

நிரப்பி லாரிகளில் ஏற்றினார்.

அவருடன் வாரியத் தலைமை பொறியாளர் எல்.ஆர். சாஸ்திரி நிர்வாகப் பொறியாளர் சுப்ரமண்ணன் உதவிப் பொறியாளர்கள் சங்கர்லால், சுப்பிரமணியம் இளநிலைப் பொறியாளர்கள் ஈசுவரன், சுப்பராயன் 135-வது வட்ட கழக செயலாளர் தமிழ்மணி, மந்தவெளி நடராஜன், அவைத் தலைவர் நாஞ்சில் வைத்தி, வட்டச் செயலாளர் குப்புசாமி, பார்த்தசாரதி, ஏ.டி. ஏழுமலை கே. ஏழுமலை கேசவராமன் துலுக்காணம், எம். எஸ். வசுவநாதன், எம். ரங்கநாதன் பட்டினப்பாக்கம் மகளிர் மன்ற செயலாளர் சரோஜினி அம்மாள், உதவியாளர்கள் நளினி, லட்சுமி, சுசிலா, ராணி ஆகியோர் மற்றும் வின்செனட், ஜெயராமன் ஆகியோர்களும் துப்புரவுப் பணிகளில் ஈடுபட்டனர்.

## சத்துணவுக் கட்டிடம்

பட்டினப்பாக்கம் ஏடி, ஏசி எக்ஸ், ஏபி மற்றும் பல்வேறு பகுதிகளில் குப்பைகளை அகற்றியும் அழுக்கு மண் மேடுகளை அப்புறப்படுத்தியும் துப்புரவு செய்தனர்.

முன்னதாக பட்டினப்பாக்கம் குடியிருப்போர் மற்றும் கழகத் தோழர்கள் வாரியத்தலைவருக்கு மாலை அணிவித்தனர்.

அப்போது குடியிருப்போரின் குறைகளை செல்லையா பரிவுடன் கேட்டறிந்தார்.

இதுவரை எந்தத் தலைவரும் இதுபோல் எங்கள் குடியிருப்புகளுக்கு வந்து நேரிடையாக எங்கள் குறைகளை கேட்டதில்லை என்றும் அவர்கள் மகிழ்ச்சி தெரிவித்தனர். நீங்கள் அடிக்கடி வருவதால் இங்குள்ள அதிகாரிகளும் தங்கள் பணிகளில் தீவிரமாகக்கவனம் செலுத்துவதற்கு வசதியாக உள்ளது என்றும் குடியிருப்போர் குறிப்பிட்டார்கள்.

தனியார் லாரிகள் ஒரு இடத்தில் நிறுத்தப்பட்டு அந்த இடம் பணிமனையாக பயன்படுத்தப் படுவதையும் அவர் பார்த்தார்

உடனடியாக லாரிகளை அப்புறப்படுத்த நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் அவர் கூறினார்.

பட்டினப்பாக்கம் ஆரம்பப் பாடசாலையில் சத்துணவுச் சமையற்கூடம் ஒன்று கட்டித்தர வேண்டும் என்று அப்போது தலைமை ஆசிரியை கோமதி கேட்டுக் கொண்டார். உடனடியாக சமையல் கூடம் கட்டித்தருவதற்கு வீட்டுவசதி வாரிய அதிகாரிகளுக்கு அவர் உத்தரவிட்டார்.

## துப்புரவு பணி விஸ்தரிப்பு

பின்னர் நிருபர்களிடம் அவர் பேசுகையில் கூறியதாவது:

பட்டினப்பாக்கம் குடியிருப்புகளில் குடிநீர் சப்ளை குழாய்களை புதுப்பித்தல், கட்டிடங்களுக்கு பழுது பார்ப்பது, வெள்ளை அடிப்பது, மின்சார சாதனங்களை புதுப்பித்துப் பொருத்துவது, முதலிய பல்வேறு வசதிகள் செய்ய

## பம்பாயில் ராணுவம் ரோந்து

பம்பாய், ஜூன் 26 — சிவசேனை இயக்கத் தலைவர் மதுக்கர் சர்போத்தார் தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டதை அடுத்து கடந்த புதன் கிழமையிலிருந்து பம்பாயின் வடமேற்குப்பகுதியில் உள்ள கோர்வாடி என்னும் இடத்தில் பயங்கர கலவரம் நடந்துவருகிறது

இதையொட்டி அப்பகுதியில் ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அத்துடன் கலவரப் பகுதியில் ராணுவம் ரோந்து வருகிறது. இப்போது அப் பகுதியில் நிலைமை கட்டுக்கு அடங்கி அமைதி நிலவுவதாக பம்பாய் போலீஸ் கமிஷனர் ஜூலியோரிபெய்ரோ கூறினார்

ரூ. 3 லட்சத்து 10 ஆயிரம் ஒதுக்கப்பட்டுள்ளது.

இந்த துப்புரவுத்திட்டம் மேலும் பல குடியிருப்புகளுக்கு விஸ்தரிக்கப்படும்.

அடுத்துபீட்டர்ஸ்காலனியில் இந்தத் திட்டத்தின் கீழ் துப்புரவுப் பணிகள் மேற்கொள்ளப்படும்

இவ்வாறு வீட்டுவசதி வாரியத் தலைவர் ஏ. செல்லையா கூறினார்.

மதுரையில்

## அமைச்சர் காளிமுத்து பேசுகிறார்

மதுரை, ஜூன். 26 மதுரை மாநகர் எம் ஜி.ஆர். மன்றம் 15-வது வட்டம் சார்பாக மாபெரும் கழகப் பொதுக் கூட்டம் வரும் ஜூலை 1-ந்தேதி மாலை கல்பனா தியேட்டர் அருகே ஜெய்லானி தலைமையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் அமைச்சர் காளிமுத்து கலந்து கொண்டு பேசுகிறார். மேயர் பட்டுராஜன், துணைமேயர் முனியசாமி, நவநீதகிருஷ்ணன் பாலுசாமி எம். எல் ஏ., ராஜேந்திரன், பாப்பையா, பாக்கியம், கருணாகரன், அன்பழகன், பாலகுரு, மதுரை எஸ். பாண்டியன், ராஜன் செல்லப்பா, சுந்தரேசன், பாண்டியராஜன், மற்றும் பலர் பேசுகின்றனர்.

## நீதிபதி நஞ்சப்பன் விசாரணை குழு நீடிப்பு

சென்னை, ஜூன். 26- உதகமண்டலத்தில் உள்ள ஏரிப்பகுதிகளிலும் அதைச் சுற்றிலும் உள்ள பகுதியில் திரைப்படப் பிடிப்பில் கலந்து கொண்ட குழுவிற்கும் மக்கள் கூட்டம் ஒன்றுக்கும் இடையே ஏற்பட்ட சம்பவம் பற்றி விசாரிக்க விசாரணைக் கமிஷன் நியமிக்கப்பட்டது. இந்தகமிஷன் காலம் 3 மாதம் என நிர்ணயிக்கப்பட்டிருந்தது. தற்போது மேலும் 3 மாத காலம் குழுவின் காலத்தை நீட்டித்து அரசு உத்தரவிட்டுள்ளது.

## சென்னையில் புதிய நூலகங்கள்

சென்னை, ஜூன். 26 சென்னை நகரில் செம்பியம், மாதவரம்சாலை, அகரம், ஜவகர்நகர் ஆகிய 5 இடங்களில் சென்னை பொது நூலகத்தின் இளைகள் திறக்கப்பட்டுள்ளன.

இந்த நூலகங்களை இயக்குனர் வையாபுரி திறந்து வைத்தார். அமைச்சர் அரங்கநாயகம் அறிவித்தது போல் ஒவ்வொரு நூலகமும் அரசின் சொந்தக் கட்டிடத்தில் துவக்கத்தில் 5 ஆயிரம் புத்தகங்களுடனும் செய்தி தாளகளுடனும் ஆரம்பிக்கப்படுகின்றன.

# மதுரை தீ விபத்து: 8 கடைகள் நாசம், ரூ. 50 ஆயிரம் சேதம்

மதுரை, ஜூன். 26 மதுரை நகரில் நேற்று நடந்த தீவிபத்தில் 8 கடைகள் எரிந்து சாமபலாயின. ரூ 50 ஆயிரம மதிப்புள்ள பொருட்கள் சேதமடைந்தன.

மதுரை மேலவாசலில் மாநகராட்சி லாரி நிலையம் உள்ளது. இங்கு பழைய இரும்பு கடைகள் உள்ளன. இங்கு சுமார் 154 கடைகள் உள்ளன. நேற்று அதிகாலை 3 மணிக்கு வரதராசன் என்பவர் கடையில், திடீரென்று தீவிபத்து ஏற்பட்டது.

தீபற்றிய தகவல் கிடைத்ததும் தீயணைப்பு படையினர் விரைந்து வந்து தீயை அணைத்தனர். தீ பனைமர உயரத்திற்கு ஜுவாலை விட்டு எரிந்தது. கடும் போராட்டத்திற்கிடையே தீயணைப்புப் படையினர் தீயை அணைத்தனர். இந்த தீவிபத்தில் 8 கடைகள் எரிந்து நாசமாயின. சுமார் ரூ. 50 ஆயிரம் மதிப்புள்ள பொருட்கள் சேதமடைந்திருக்கும் என்று கூறப்படுகிறது.

தீ விபத்து பற்றிய தகவல் அறிந்ததும் மதுரை மாநகராட்சி மேயர் பட்டுராசன், ஆணையர் சேர்மன் துரை ஆகியோர் சம்பவ இடத்திற்குச் சென்று தீயை அணைக்கும் பணியில் தீயணைப்புப் படையினருக்கு உதவிய பொது மக்களுடன் சேர்ந்து தீயணைப்புப்பணியில் ஈடுபட்டனர்.

## குடும்ப அட்டை உணவுப்பொருள் வாங்கும் மாற்றுதேதி

சென்னை, ஜூன். 26- தமிழ்நாடு நுகர் பொருள் வாணிபக் கழகத்தினரால் சென்னை நகரிலும் புறநகரிலும் நடத்தப்படும் கடைகளுக்கு வரும் 29ந் தேதி வேலைநாளாக இருக்கும் அதற்கு மாறாக 30ந் தேதி ஈடுகட்டிய விடுமுறையாகும்.

எனவே 25, 26, 27 ஆகிய நாட்களில் உணவுப் பொருள் வாங்காதவர்கள் 28 ந் தேதியன்று வாங்கிக் கொள்ளலாம். 28ந் தேதி பொது நாளாக அறிவிக்கப்பட்டிருக்கிறது, அத்தினத்தில் வழக்கமாக வாங்க வேண்டியவர்களும் வாங்கிக் கொள்ளலாம்.

27-ந் தேதி

## அமைச்சர் அருணாசலம் வானொலியில் பேசுகிறார்

சென்னை, ஜூன் 26— கிராமத் தொழில்துறை அமைச்சர் நாமக்கல் அருணாசலம் நாளை 27ம் தேதி பகல் 12-10 முதல் பகல் 12-40 வரை கிராமத் தொழில் வளர்ச்சி என்ற தலைப்பில் வானொலியில் பேசுகிறார்.

**

## மின்சாரம் தாக்கி 2 வாலிபர்கள் மரணம்

சென்னை, ஜூன். 26- சென்னை குரோம்பேட்டையை சேர்ந்தவர்கள் முரளி (வயது 22) புவராஜ் (வயது 18) இவர்கள் இருவரும் தண்ணீர்லாரி வேலையின்றி இருந்ததாக சொல்லப்படுகின்றது.

நேற்று முரளியும், புவராஜும் தாம்பரத்தில் உள்ள ஒரு திரையரங்கில் படம் பார்த்துவிட்டு சைக்கிளில் திரும்பிக் கொண்டிருந்தார்களாம். இருவரும் குரோம்பேட்டை அருகேயுள்ள துர்காநகர் பகுதியில வந்துகொண்டிருந்த போது மின்சார கம்பி அறுந்து மேலே விழுந்ததால இருவரும் அந்த இடத்திலேயே பரிதாபகரமாக இறந்தனர் அந்த வழியே வந்த ரோந்து போலீசார் இதைக் கண்டு பிணத்தை கைப்பற்றி விசாரணை செய்ததில் இந்த தகவல் தெரியவந்தது. குரோம்பேட்டை போலீசார் இது குறித்து மேலும் விசாரித்து வருகின்றனர்.

**

## காந்தி மண்டபத்தில் வழிபாட்டுக் கூட்டம்

சென்னை, ஜூன் 26. சென்னை கிண்டி காந்தி மண்டபத்தில் வரும் 30ந் தேதி மாலை 6.30 மணிக்கு வழிபாட்டுக் கூட்டம் நடைபெறுகிறது. ராஜலட்சுமி நாராயணன்பக்தி பாடல்களைபாடுகிறார். தக்கார் பாபா வித்யாலயா மாணவர்கள் இராட்டை நூற்கிறார்கள்.

**

கர்நாடகத்தில்

கோஷ்டி மோதல்:

## 5 பேர் குத்திக் கொலை

ஹுப்ளி, ஜூன் 26. கர்நாடக மாநிலத்தில் ஹுப்ளி பகுதியில் கமரப் பேட் என்னும் இடத்தில் ஆட்டோரிக்ஷா மோதி ஒரு குழந்தை இறந்து விட்டது. அதை யொட்டி நடந்த கோஷ்டிமோதலில் 5 பேர் குத்தி கொல்லப் பட்டனர்,

இரண்டு ஆட்டோரிக்ஷாகள் தீ வைத்துக் கொளுத்தப்பட்டன

இந்த வன்முறைச் சம்பவங்களையொட்டி கலவரப் பகுதியில் இரவில் ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஊர், சாராயக் கடைகளை மூடுமாறும் உத்தரவு இடப்பட்டது.

இரவல் தீவிர போலீஸ் ரோந்து ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாக போலீஸ் டி. ஐ. ஜி. பல்வந்த்சேகர் கூறுகிறார்.

3 லட்சம் ரூபாய் ஒதுக்கீடு

# பட்டினப்பாக்கம் குடியிருப்புகளுக்கு மேலும் பல வசதிகள்

## வீட்டுவசதி வாரியத்தலைவர் ஏ. செல்லய்யா தகவல்

சென்னை, ஜூன் 26- பட்டினப்பாக்கம் வீட்டு வசதி வாரிய குடியிருப்புகளில் மேலும் பல்வேறு வசதிகள் செய்ய ரூ 3 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளதாகவும், அதற்கான பணிகள் தொடங்கி விட்டன என்றும் வாரியத் தலைவர் ஏ. செல்லய்யா கூறினார்.

சுற்றுப்புற சுகாதார நாள் உலகம் முழுவதும் கொண்டாடப்படுவதை யொட்டி தனது குடியிருப்புப் பகுதிகளில் துப்புரவுப்பணிகளை வாரியத் தலைவர் மற்றும் அதிகாரிகள் குடியிருப்போர் ஆகியோர் ஒருங்கிணைந்து மேற்கொளளும் புதிய திட்டம் ஒன்றை வீட்டு வசதி வாரியத்தலைவர் ஏ. செல்லய்யா கொண்டு வந்துள்ளார்.

இத்திட்டத்தின் கீழ் கடந்த 9ம்தேதி சென்னை லாயிட்ஸ் காலனி (குடிப பிசைப் புலவர் கே. ஆர். ராமசாமி நகர்) யில் வாரியத் தலைவர் செல்லய்யா மற்றும் அதிகாரிகள் காலனி குடியிருப்போர் துப்புரவுப் பணிகளை மேற்கொண்டனர்.

இதைத் தொடர்ந்து சென்னை பட்டினப்பாக்கம் குடியிருப்புப் பகுதியில் நேற்று துப்புரவுப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன.

வாரியத் தலைவர் செல்லயா கையில் துடப்பம் ஏந்தி குப்பைக்கூட்டினார். மண் வெட்டி எடுத்து குப்பை

வண்ணை செல்லையா கையில் துடைப்பம் ஏந்தி அப்புறப்படுத்தினார், கூடைகளில் குப்பைகளை

(1-ம் பக்கம் பார்க்க)

## ஏல விற்பனை

(1) J. தார்மிசந்த் No. 7 மாதவரம் ஹைரோடு சென்னை—60 (24-8-82 முதல் ஜனவரி முடிய) ஏலத்தேதி 6-7-84 அன்று பகல் 11 மணிக்கும், (2) B. கான்மல் ஜெயின், 39.A. சுந்தர விநாயகர் கோயில் தெரு சென்னை—60 (24-8-82 முதல ஜனவரி 83 முடிய) ஏலத்தேதி 7-7-84 அன்று மதியம் 11 மணிக்கும் மேல, 3) புக்ராஜ் பாபுலால் NO182 யாதுவாள் தெரு, பாடி, சென்னை - 50 (24-8-82 முதல் 83 மார்ச் முடிய) ஏலத்தேதி 13-7-84 அன்று பகல் 11 மணிக்கும் 4) பி.மாவீர் சந்த் ஜெயின், NO. 104 எம். டி. எச்ரோடு, அம்பத்தூர் சென்னை-53 (24-8-82 முதல் மார்ச் 83 முடிய) ஏலத்தேதி 13-7-84 அன்று மதியம் 1 மணிக்கு மேல் 5. பி ஜவர்லால் சௌகார் 189 ஜி. என். எஸ். தெரு அம்பத்தூர் சென்னை-53 (24-8-82 முதல் மார்ச் 83 முடிய) ஏலத்தேதி 13-7-84 மதியம் 3. மணிக்கும். 6. எஸ். ரஞ்சித்மல் No 2 முகப்பேறு ரோடு மன்னூர் பேட்டை பாடிசென்னை.50 (31-12-79 முடிய) ஏலத்தேதி 16-7-84 அன்று 11 - மணிக்கு மேல் 7 பாபுலால் 128-B எம்.டி எச் ரோடு, சென்னை-50 (பாடி) (24-8-82 முதல் 83 மார்ச முடிய) ஏலத தேதி 16-7-84 அன்று மதியம் 3 மணிக்கு மேல். 8 B கான்மல் ஜெயின் 39-A சுந்தர விநாயகர் கோயில் தெரு, சென்னை-60 (24-8-82 முதல் 83 முடிய) ஏலத்தேதி 6-7-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 7-7-84 அன்று மதியம் 11 மணிக்கு மேல்

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள, பொன, பொன அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம்சநதஜெயின 150, சச்சிதானந்தம்தெரு, சென்னை- 12 ல் மாவட்ட ஆட்சியரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்டுள்ள ஏலத தேதிகளில் ஏலம் போடுவார்.

# கஞ்சன் ஜங்கா-கங்கா-காவேரி-ராஜலட்சுமி லாட்டரி முடிவுகள்

### கஞ்சன் ஜங்கா

புதுடெல்லி ஜூன் 26 கஞ்சன் ஜங்கா லாட்டரியின் 60-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 2 லட்சம்
வி 825028

இதே எண்களை உடைய மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 1000 உண்டு.

2-வது பரிசு
ரூ 50 ஆயிரம்
வி 113424

3-வது பரிசு
தலா ரூ 20ஆயிரம்
டி 621702 யூ 494554
வி 332521

4-வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
டி 552473 யூ 572024
வி 582375

கீழ்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும்பரிசு உண்டு

5-வது பரிசு
தலா ரூ 1,000
60473 40701 59182
69961 60923 46569
42162 98043 52082
74250

6-வது பரிசு
தலா ரூ 100
6120 6565 0487 6126
5062 5924 2060 9318
8656 8478

7-வது பரிசு
(தலா ரூ 50)
5306 9453 4845 8472
6817 9124 2324 7243
8081 9025

8-வது பரிசு
தலா ரூ. 20
7473 3343 5902 5316
7675 4745 0349 0462
8298 5448 2665 3338
4718 9734 7433 0305
2258 8215 9164 9865

9-வது பரிசு
தலா ரூ. 10
727 389

ஏஜெண்டுகள் பரிசு
ரூ 50 7183

### கங்கா-காவேரி

கங்கா-காவேரி லாட்டரியின் 50-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 2 லட்சம்
ஜி இசெட் 222704

இதே எண்கள் உடைய மற்றவரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 1000 உண்டு

2-வது பரிசு
தலா ரூ.10 ஆயிரம்
ஜி. எகஸ் 205793
ஜி ஒய் 204782
ஜி ஜசட் 282789

கீழ்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு

3-வது பரிசு
தலா ரூ. 500
74676 72677 34801
09476 96109 79918
88575 73976 89601
18202

4-வது பரிசு
(தலா ரூ. 50)
3948 9577 2675 0195
1691 0676 8576 3496
0991 9442

5-வது பரிசு
(தலா ரூ. 20)
3614 6728 2129 2915
1285 9569 4484 1396
8011 0405

6-வது பரிசு
தலா ரூ 10
099 586 104 685 297
791 548 893 469 904

7-வது பரிசு
(தலா ரூ 5)
067 208 052 399
197 316 186 426
204 495 501 720
588 898 669 809
601 996 792 966

ஏஜெண்டுகள் பரிசு
தலா ரூ. 25
0857 7080

விற்பனையாளர் பரிசு
தலா ரூ. 25
9309 8217

### ராஜலட்சுமி

ராஜலட்சுமி லாட்டரியின் 205-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:—

முதல் பரிசு
ரூ. 1 லட்சம்
ஆர். எம். 560746
(கல்கத்தா)

(இதே எண்கள்உடைய மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ 1000 உண்டு)

2-வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
ஆர் எல் 154182 (டெல்லி)
ஆர்எம் 367484 பாலக்காடு
ஆர்என் 112040 லக்னோ

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3-வது பரிசு
தலா ரூ 500
05037 72373 65941
45203 27078 80363
66900 56647 36489
87299

4-வது பரிசு
(தலா ரூ 50)
0113 7727 4425 1179
0323 9024 7250 3102
0578 9102

5-வது பரிசு
தலா ரூ. 20
1018 7051 6843 5447
1556 7948 6998 6175
1559 8447

6-வது பரிசு
தலா ரூ. 10
091 741 556 344
173 870 629 401
287 996

7-வது பரிசு
தலா ரூ. 5
02 34 53 79

ஏஜெண்டுகள் பரிசு
ரூ. 5 11

### மகாலட்சுமி

மகாலட்சுமி லாட்டரியின் 341-வதுகுலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 1 லட்சம்
பி 942240

2-வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
எ 853724 பி 932154
சி 893496 டி 832868

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு

3-வது பரிசு
தலா ரூ 1000
68134 36128 46650
93434 55438 40454
43173 21451 89396
91476

4-வது பரிசு
தலா ரூ. 100
8933 9464 7436
0194 6817 1944
8756 3176 9716
0951

5-வது பரிசு
தலா ரூ 20
0698 0145 2984 6851
2996 2973 1500 3605
8774 8727

6-வது பரிசு
தலா ரூ 10
022 197 263 356 406
531 657 726 826 905

7-வது பரிசு
தலா ரூ 5
075 116 203 387
403 533 696 755
896 954

ஏஜெண்டுகள் பரிசு
தலா ரூ. 5
075 174 215 301
434 591 638 762
823 915

விற்பனையாளர் பரிசு
தலா ரூ 5
056 124 233 351 465
563 633 737 837 933

### பாக்கியலட்சுமி

பாக்கியலட்சுமி லாட்டரியின் 65-வது குலுக்கல் முடிவுகள் வருமாறு:—

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
ஜி கே 217609
ஜி எல் 379747
ஜி எம் 284096

2-வது பரிசு
ரூ. 15 ஆயிரம்
ஜி கே 247893
ஜி எல் 439174
ஜி எம் 141885

3-வது பரிசு
ரூ. 5 ஆயிரம்
ஜி கே 44 029
ஜி எல் 133916
ஜி எம் 131369

4-வது பரிசு
ரூ 1000
ஜி கே 95061
ஜி எல் 53815
ஜி எம் 93342

5-வது பரிசு
ரூ 500
ஜி கே 36899 50660
ஜி எல் 63900 02772
ஜி எம் 94314 62792

6-வது பரிசு
ரூ 100
ஜி கே 2597 ஜி எல் 4568
ஜி எம் 4355

7-வது பரிசு
ரூ. 50
ஜி கே 2253 6181
ஜி எம் 9516 6040
ஜி எல 1664 8896

8-வது பரிசு
ரூ 10
ஜி கே 297 729
ஜி எல 728 641
ஜி எம் 616 991

9-வது பரிசு
ரூ 5
ஜி கே 98 11
ஜி எல் 27 03
ஜி எம் 97 46

### அருணாசல பிரதேசம

அருணாசல பிரதேச லாட்டரியின் 43-வது குலுக்கல் முடிவுகள் விவரம் வருமாறு

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
இ எப் 446647

2-வது பரிசு
ரூ. 10 ஆயிரம்
இ டி 431657
இ இ 436663
இ எப் 318310

3-வது பரிசு
ரூ 500
22426 33553 40261
42706 62394 67770
88292 92670 92689
99301

4-வது பரிசு
ரூ 50
2134 2232 3860
4075 4163 4747
7067 8354 8840
9172

5-வது பரிசு
ரூ 20
1332 2819 6436 6461
6533 7619 7649 7680
7656 9613

6-வது பரிசு
தலா ரூ. 10
037 139 251 389
407 521 665 708
847 920

7-வது பரிசு
ரூ. 5
009 010 041 048 157
162 172 190 247 257
292 295 302 328 380
393 403 458 463 468
534 553 566 576 611
637 647 658 718 735
758 793 851 863 873
882 904 941 953 986

(7-ம் பத்தி தொடர்ச்சி)

போட்டுக்கொண்டுமக்களை ஏமாற்றலாம் என்று நம்புகிறார் ஆனால் மக்கள் அவரை அடையாளம் கண்டு கொள்வார்கள்.

இவ்வாறு திருநாவுக்கரசு பேசினார்.

## விமானப்படை நிலையம்

### தாம்பரம்

1984-85ம் ஆண்டிற்கான காலத்தில், விமானப்படை நிலையத்தின் காம்ப்பில் உள்ள கீழ்காணும் பொருட்களை அனுபோக பாத்தியதை உரிமையின் ஏல விற்பனை 18 7-84 காலை 10 மணிக்கு கீழே ஒவ்வொன்றிற்கும் எதிராக குறிப்பிடப்பட்டுள்ள காலத்திற்கு தாம்பரம் விமானப்படை நிலைய மெயின்கேட்டில் நடைபெறும்.

1-8-84 முதல் 31-3-85 வரை ஏழு வருட காலத்திற்கு காம்ப் பகுதியில் விளைந்துள்ள புல் மற்றும் புதர்களை வெட்டிஎடுத்துக் கொள்ளும் உரிமை,"

விற்பனை நிபந்தனைகள்:

(a) ஏலதாரர்கள் ரூ. 20க்கான டேவணித்தொகையை ஏலத்தை நடத்தும் அதிகாரியிடம் ஏலவிற்பனை துவங்குவதற்கு முன்னதாக டெபாஸிட் செய்பவர்கள் மட்டுமே ஏலத்தில் கலந்து கொள்ள தகுதி பெற்றவர்களாவார்கள் ஏல விற்பனையில் வெற்றி பெற்றவர்கள் டேவணி தொகை பின்னர் சரிசெய்துகொள்ளப் படும்.

b ஏலவிற்பனையில் வெற்றிபெற்றவர்கள் ஏல விற்பனை செய்யும் அதிகாரியிடம் ஏலத்தொகையை டேவணித் தொகை போக மீதித் தொகையை உடனே செலுத்தவேண்டும்.

c) வெற்றி பெற்ற ஏலதாரர்கள் ஏலத்தொகைதவிரமேற்கொண்டு 25% தொகையை செக்யூரிட்டி டெபாஸிட்டாக செலுத்தவேண்டும் இந்த தொகை ஒப்பந்த காலத்திற்கு பின்னர் திருப்பியளிக்கப்படும்.

d) இந்த விற்பனையில் வேறுஒருவருக்குவாடகைக்கு (Sublet) அளிக்கக்கூடாது.

e ஏலதாரர்கள் அல்லது அவர்களது பணியாட்கள் (தாம்பரம் விமானப்படை நிலையத்திலுள்ள) எந்தஒரு மரத்திற்கு அல்லது நிலத்திற்கோ ஊறுவிளைவிக்கக் கூடாது

f. விமானப்படை கமாண்டிங் அதிகாரி விமானப்படை நிலையம், தாம்பரம் அவர்கள் இந்த ஒப்பந்த காலத்திற்குள் எந்த நேரத்திலும் 24 மணி நேர அறிவிப்பின் கீழ் இந்த ஒப்பந்தத்தை ரத்து செய்யும் உரிமை பெற்றவராவார். ஒப்பந்தத்தின்முடிவுபெறாத காலத்திற்கு மீதமுள்ள சராசரி தொகையை எழுத்து மூலமான அறிவிப்பின் பேரில் திருப்பியளித்து விடுவார்.

g. மேற்கண்ட நிபந்தனைகளில் ஏதாவது ஒன்றை ஏலதாரர் மீறினாலும் தாம்பரம், விமானப் படை நிலைய அதிகாரியின் விமான கமாண்டிங்அதிகாரி ஏல விற்பனையை ரத்து செய்யும் உரிமையை பெற்றவராவார் ஏலத்தொகை அல்லது செக்யூரிட்டி டெபாஸிட் - ஆகியவற்றை திருப்பியளிக்கப்பட மாட்டாது.

ஏலதாரர் வருமானவரி கிளியரன்ஸ் சர்டிபிகேட்டும் வாக்குமூலமும் அளிக்க வேண்டும்

davp 682 (52) 84

## ஏல விற்பனை

1. ரதத்னசந்த், தர்மிசந்த் ஜெயின, 14, புதுத்தெருசென்னை-12 அறிவிக்கப்பட்ட ஏல தேதி 26-6-84 மாற்றப்பட்ட ஏல தேதி 29-6-84 அன்று பகல 12 மணிக்கும், 2. S Hasthimull சௌகார் சோர்டியா, நம்பர் 60-2 புரசைவாக்கம் ஹைரோடு சென்னை-10 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 28-6-84 மாற்றப்பட்ட ஏலத்தேதி 3-7-84 அன்று பகல 12 மணிக்கும 3. தேவ்ராஜ், 31, தானா தெரு, புரசைவாக்கம், சென்னை-7 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 26-6-84 மாற்றப்பட்ட ஏலத்தேதி 5-7-84 அன்று பகல் 12 மணிக்கும், 4. பி. எஸ். ஜெயின், நெ. 91, அவதன் பாப்பையா ரோடு, சென்னை-7 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 27-6-84 அன்று மாற்றியமைக்கப்பட்ட ஏலததேதி 5-7-84 அன்று பகல 12 மணிக்கும் 5. பிரதாப்மல் சௌகார், 165, ஸ்டிராகேன்ஸ் ரோடு, சென்னை-12 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 29-6-84 மாற்றப்பட்ட ஏலத்தேதி 7-7-84 அன்று பகல 12 மணிகக்கும் 6. நதமல் ஜெயின, 79, ராகவாச்சாரி தெரு, பெரம்பூர், சென்னை-11 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 18-6-84 மாற்றியமைக்கப்பட்ட ஏலத்தேதி 9-7-84 அன்று பகல் 12 மணிக்கும், 7. கே. அன்ராஜ் ஜெயின், 22, சௌகடாகத் தெரு, சென்னை-9 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 28-6-84 மாற்றப்பட்ட ஏலத்தேதி 10-7-84 அன்று பகல் 12 மணக்கும், 8 ஜீவ்ராஜ் நவரத்மல்ஜெயின, 86, மார்க்கட்தெரு சென்னை-11, அறிவிக்கபட்ட ஏலத்தேதி 29-6-84 மாறறப்பட்ட ஏலத்தேதி 11-7-84 அன்று பகல் 12 மணிக்கும்,

மேற்படியார் குறிப்பிட்டுள்ள கடைகளில் அடகு வைத்துள்ளபொன், பொன், அல்லாத பொருள்களை வருவாய்த்துறை அதிகாரிகள முனபு அரசு அங்கீகாரம் பெற்றஏலதாரர் எம். தரம் சந்த் ஜெயின், 150 சச்சிதானந்தம தெரு, சென்னை 12 மாவட்ட ஆட்சியரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதிகளில்ஏலம் போடுவார்.

சென்னை

## ஆதிஆந்திரர் பகுதிகளில் அனகாபுத்தூர் ராமலிங்கம சுற்றுப்பயணம்

சென்னை, ஜூன். 26 சென்னை பெருநகர் ஆதி ஆந்திரர் நற்பணி கழகத் தலைவர் அனகாபுத்தூர் ராமலிங்கம் எம். எல்.சி. பொதுச்செயலாளர் டாக்டர் ஆ. ஒப்பையா ஆகியோர் ஆதிஆந்திரர் வசிக்கும் பகுதிகளுக்கு சென்று பொதுமக்களை சந்திக்கவிருக்கிறார்கள்.

இன்று 26ம் தேதி பென்ஷனர்ஸ் லேபர் வேன் பகுதிக்கும், 27ம் தேதி மாலை சூளை காட்டானகுளம் பகுதிக்கும் 28ம் தேதி மாலை அனந்தநசயகி நகர், நாக்கேறன் பேசின் சாலைக்கும் சென்று ஆதி ஆந்திர மக்களைச் சந்தித்துப் பேசுகிறார்கள்.

# அமிர்தசரஸ் பொற்கோவில் திறக்கப்பட்டது

அமிர்தசரஸ் ஜூன் 26- ராணுவ நடவடிக்கைக்குப் பிறகு நேற்று முதல் தடவையாக பொற்கோவில் தரிசனத்திற்காக திறக்கப்பட்டது. சாதி மத வேறுபாடு இன்றி 12 ஆயிரத்துக்கும் அதிகமான பக்தர்கள் நீண்ட கியூ வரிசையில் காத்திருந்து பயபக்தியோடு சாமி கும்பிட்டனர்.

சீக்கியர்களுக்கு தனிநாடு (காலிஸ்தான் கோரி பிந்தரன்வாலே தலைமையில் தீவிரவாதிகள் வன்முறைச் செயலில் இறங்கியதும், பொற்கோவிலில ஒளிந்திருந்த அவர்களை ராணுவம் ஒடுக்கியதும் தெரிந்ததே.

இதையொட்டி கடந்த 3 வாரங்களாக பொற்கோவிலில் சாமி தரிசனம் செய்ய பக்தர்கள் யாரும் அனுமதிக்கப்படவில்லை.

ராணுவ நடவடிக்கைக்குப் பிறகு முதல் தடவையாக நேற்று காலை 6 மணிக்கு பக்தர்கள் தரிசனத்திற்காக பொற்கோவில் திறந்து விடப்பட்டது.

கடிகாரக் கோபுரம் வழியாக பக்தர்கள்கோயிலுக்குள் செல்ல அனுமதிக்கப்பட்டனர்

### 3 மணி நேரம்

சாதிமத வேறுபாடின்றி ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் நீண்ட வரிசையில் காத்திருந்து பயபக்தியோடுசாமி கும்பிட்டார்கள் ஒரு பக்தர் தரிசனம் செய்ய சுமார் 40 நிமிட நேரம் காத்திருக்க வேண்டியதாயிற்று.

சுமார் 3 மணி நேரம் கோவிலை திறந்துவைத்து இருந்ததில் 12 ஆயிரத்துக்கும் அதிகமான பக்தர்கள் சாமி சரிசனம் செய்தனர்.

இனி தினமும் காலை 6 மணியிலிருந்து 9 மணி வரை பொற்கோவில் திறந்து வைக்கப்படும் என்று உயர் அதிகாரி ஒருவர் கூறினார்.

### பழுது பார்க்கப் படுகிறது

எனினும் பக்தர்கள் சிரோமணி குருத்துவாரா பிரபந்தக்கமிட்டிவளாகத் திற்குள்ளோ அல்லது அகால் தக்த் என்ற பாதாள் அறைக்குள்ளோ செல்ல அனுமதிக்கப்படவில்லை.

இதற்கிடையில் பொற்கோவிலில் ராணுவ நடவடிக்கையின்போது ஏற்பட்ட சேதங்களை ராணுவத்தினர் பழுது பார்த்து வருகிறார்கள்.

மக்களுக்கு பயனளிக்காத

# திட்டங்களை தீட்டி பணத்தை கொள்ளை அடித்த கருணாநிதி

அமைச்சர் திருநாவுக்கரசு பேச்சு

பள்ளிப்பட்டு, ஜூன். 26- மக்களுக்கு பயனளிக்காத திட்டங்களை தீட்டிவரிப் பணத்தை கொள்ளையடித்தவர் கருணாநிதி என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

பள்ளிப்பட்டுத்தொகுதி வங்கனூர் நகரத்தில் நடைபெற்ற கழக பொதுக்கூட்டத்தில் கைத்தறி கூட்டுறவுத்துறை அமைச்சர் திருநாவுக்கரசு கலந்து கொண்டு பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

புரட்சித்தலைவர் ஆட்சிக்காலம் தமிழக வரலாற்றில் பொற்காலம் ஆகும். கிராம மக்கள் பொருளாதாரத்தில் முன்னேற்றம் அடைய முதல்வர் புரட்சித்தலைவர் நல்லாட்சி நடத்துகிறார்

கருணாநிதி 7 ஆண்டு கால ஆட்சியில் மக்களின் வரிப் பணத்தைத் தான் கொள்ளை அடித்தார்.

மக்களுக்குப்பயனளிக்காத திட்டங்களை தீட்டி பணத்தை கொள்ளை அடித்தவர் கருணாநிதி. வீராணதிட்டம், கூவத்தை மணக்கவைக்கும் திட்டம், விமானத்தில் இருந்து பூச்சி மருந்து தெளிக்கும்திட்டம்இப்படி மக்களுக்கு பயனளிக்காத திட்டங்களைத் தீட்டி பணத்தைக் கோடி கோடியாய் கொள்ளையடித்த கொள்ளைக் கூட்டத் தலைவன் தான் கருணாநிதி.

இன்று புத்தர் போலவும் காந்தியார் போலவும் கருணாநிதி உலாவர முயற்சிக்கிறார். 14 கட்சிகளை அமைத்துக் கொண்டு கம்யூனிஸ்ட் கட்சியின் முகமூடியை

(5ம் பத்தி பாரக்க)

பஞ்சாப்கலவரம வெள்ளை அறிக்கை

## மத்திய அமைச்சரவை ஆலோசனை

புதுடெல்லி, ஜூன் 26- பஞ்சாப் கலவரம் பற்றிய வெள்ளை அறிக்கைக்கு ஒப்புதல் அளிப்பதற்காக மத்திய அமைச்சரவை கூட்டம் நேற்று பிரதமர் இந்திராகாந்தி தலைமையில் கூடியது.

100பக்கங்கள்கொண்ட வெள்ளை அறிக்கை நகல் ஒவ்வொரு அமைச்சருக்கு வழங்கப்பட்டது.

2½ மணி நேரத்திற்கும் மேலாக நடைபெற்ற இந்த ஆலோசனைக் கூட்டத்தில் அப்போது பஞ்சாபில் நிலவும் நிலவரம் குறித்தும் பல்வேறு ஆலோசனைகளும் விவாதிக்கப்பட்டது.

# தர்மபுரி மாவட்டத்தில் 10 ஆயிரம் ஏழைகட்கு ரூ. 4½ கோடி உதவி

தர்மபுரி ஜூன் 26 தர்மபுரி மாவட்டத்தில் ஏழை எளிய மக்கள் 10 ஆயிரம் பேருக்கு 4.5 கோடி ரூபாய் மான்யமாகவும் கடனாகவும் வழங்கப்பட இருக்கிறது

வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ள ஏழை எளிய மக்களின்வாழ்க்கைத்தரம் உயர தமிழக அரசு பல்வேறு திட்டங்களைதீட்டி செயல்படுத்தி வருகிறது

தர்மபுரி மாவட்டத்தில் நலிந்த பிரிவினருக்கு நிதியுதவி அளிப்பது பற்றி மாவட்ட ஆட்சித் தலைவர் வீ. மணிவண்ணன் கோபிநத்தம்பட்டியல் இந்தியன வங்கி கிளை ஒன்றை திறந்து வைத்துப் பேசியமாவட்ட ஆட்சித்தலைவர் வீ. மணிவண்ணன் கூறியதாவது:

புதிய 20 அம்சத் திட்டத்தின் அடிப்படையில் இந்தமாவட்டத்திலுள்ள 16 பஞ்சாயத்து யூனியன்களிலும் தலா 8 லட்சம் ரூபாய மான்யமாக வழங்கப்பட்டுள்ளது.

தமிழர காங்கிரசார்மூலம் 20 லட்சம் ரூபாய் கடனுதவியும் செய்யப்பட்டுள்ளது.

நடப்பு ஆண்டில் இந்த மாவட்டத்தில் ஏழை எளிய மக்கள் 10 ஆயிரம் பேருக்கு 4 கோடியே 50 லட்சம் ரூபாய் கடன் வழங்கப்படவிருக்கிறது.

கடந்த ஆண்டிலும் சுமார் 10ஆயிரம குடும்பங்களுக்கு நிதிஉதவி செய்யப்பட்டது. தேசியவங்கிகள் மூலம் 2 கோடியே 50 லட்சம் ரூபாயும் 1கோடியே 32 லட்சம் ரூபாய் மான்யமாகவும வழங்கப்பட்டது. கடந்த 4 ஆண்டுகளில சுமார் 40 ஆயிரம குடும்பங்கள பயனடைந்துள்ளன.

வாங்கும் கடன்களை பொது மக்கள் குறித்த நாளில் திருப்பிக்கொடுக்க வேண்டும் அப்போதுதான் மற்றவர்களுக்கும் கடனுதவி செய்ய முடியும்.

இவ்வாறு வீ மணிவண்ணன் பேசினார்.



PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor C. PARASURAMAN